9th September 1958]

*Cauvery water-supply*

*116 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) காவிரி தண்ணீரைக் குறைப்பதுபற்றி மைசூர் அரசாங்கம் இவ்வரசாங்கத்தை கேட்டிருக்கிறார்களா ?

(ஆ) அப்படியானால் அதன் விபரம் என்ன ?

(இ) நம் அரசாங்கம் அதற்கு அளித்த பதில் என்ன ?

(ஈ) காவிரியில் அதிக ஜல சப்ளை கிடைக்க இவ்வரசாங்கம் என்ன முயற்சி எடுக்க உத்தேசம் ?

THE HON. SRI P. KAKKAN : (அ) இல்லை ஐயா.

(ஆ) இக்கேள்வி எழாது.

(இ) இக்கேள்வியும் எழாது.

(ஈ) போதிய அளவு தண்ணீர் தற்போது காவிரியில் இருக்கிறது. எந்த நடவடிக்கையும் எடுப்பதாக உத்தேசமில்லை.

SRI A. VEDARATHNAM : காவேரித் தண்ணீர் விஷயமாக நம் அரசாங்கத்திற்கும் மைசூர் அரசாங்கத்திற்கும் ஒப்பந்தம் ஏதேனும் ஏற்பட்டிருக்கிறதா ? அப்படியானால், அது எப்போது ஏற்பட்டது ? அதன் காலவரையறை என்ன ? அதன் இறுதியில் ஒப்பந்தத்தைத் திருத்தி அமைக்கும் உத்தேசம் அரசாங்கத்தாருக்கு உண்டா ?

THE HON. SRI P. KAKKAN : காவேரித் தண்ணீர் விஷயமாக ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. அதைத் திருத்தியமைக்க வேண்டுமென்ற உத்தேசம் சர்க்காருக்கு இல்லை.

SRI R. SRINIVASA IYER : காவேரித் தண்ணீரை பெங்களூருக்குக் கொண்டுபோகத் தீர்மானிக்கப்பட்டிருப்பதாக பத்திரிகைகளில் செய்தி வந்தது. அப்படி காவேரித் தண்ணீர் பெங்களூருக்குக் கொண்டு போகப்படுமானால் அதனால் நமது ராஜ்யத்திற்கு பாதகம் ஏற்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : நமக்குப் பாதகம் ஒன்றும் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ளுவோம்.

*Misappropriation of funds*

*117 *Q.*—SRI S. M. ANNAMALAI AND SRI A. A. RASHEED : கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1956–1957, 1957–1958-ல் வட ஆற்காடு மாவட்டம் வேலூர் அரசாங்க ஆஸ்பத்திரியின் பணம் ஏதாவது கையாடப்பட்டதா ?

(ஆ) அப்படியானால், அது சம்பந்தமாய் எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The matter is under investigation. The loss caused to Government has however been made good. The person mainly responsible for the loss has been removed from service.

SRI S. M. ANNAMALAI : அந்த ஆஸ்பத்திரியில் எவ்வளவு பணம் கையாடப்பட்டது ? அதன் மீது நடவடிக்கை எடுப்பதற்கு ஏன் இவ்வளவு காலதாமதம் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஐயாயிரத்தி பதினொன்று ரூபாய் கையாடப்பட்டது. ரூபாய் திரும்பி வருவதில் காலதாமதம் இல்லை. நடவடிக்கை எடுப்பதில் தான் காலதாமதம் ஏற்பட்டிருக்கிறது. டி.எம்.ஓ.வும் மற்ற அதிகாரிகளும் அந்தக் கையாடல் பற்றி விசாரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

[9th September 1958

SRI A. A. RASHEED : Who are the persons responsible for this, Sir?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, whoever might have been responsible, the responsibility has been fixed on one Sri Venkataraya Sastri, and he has paid the amount.

## *Untouchability*

* 121 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the Government have any proposal to subsidise leading dailies to do propaganda by writing in their columns articles and stories against the practice of untouchability ; and

(*b*) if so, the amount spent for that purpose so far?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI M. JAGANNATHAN : தீண்டாமை ஒழிவதற்கு மக்களிடம் மனமாற்றம் ஏற்படவேண்டும். அந்த மனமாற்றத்தை ஏற்படுத்துவதற்கு நல்ல பிரசாரம் தேவை. அதற்காக, மத்திய சர்க்கார் இந்த சர்க்காருக்கு தீண்டாமை ஒழிப்பிற்காகக் கொடுக்கும் மானியத்தை முக்கியமான தினசரிகளுக்குக் கொடுத்து, தகுந்த மனமாற்றத்தை ஏற்படுத்தக்கூடிய கதைகளையும் கட்டுரைகளையும் அந்த தினசரிகளில் தினந்தோறும் பிரசுரிக்கச் செய்வதற்கு அரசாங்கத்தார் முன் வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : பத்திரிகைகளில் கட்டுரைகளைப் பிரசுரிப்பதன் மூலம் தீண்டாமை ஒழிப்புப் பிரசாரம் செய்ய சர்க்கார் முன்வரவில்லை. இருந்தாலும், இப்போது ஒவ்வொரு ஜில்லாவிலும் மூன்று டெபுடி சேவக்குகளையும் மூன்று அஸிஸ்டெண்ட் சேவக்குகளையும் நியமித்து அவர்கள் மூலம் பிரசாரம் செய்து வருகிறோம். அதோடு, ஹரிஜன நல சங்கம், தீண்டாமை ஒழிப்பு லீக், ராமசாமி அடிகள் சங்கம் ஆகிய மூன்று சங்கங்களுக்கும் நிதி உதவி அளித்து அவர்கள் மூலமாகவும் பிரசாரம் செய்து வருகிறோம். மேலும், நன்றாகப் பாட்டுக்கள் புனையக் கூடியவர்களைப் பாட்டுக்கள் கட்டச் சொல்லி, அப்பாட்டுக்களை கிராமபோன் ரிகார்டுகளாக எடுத்து, அவைகளை ஹரிஜன நல அதிகாரி, ஜில்லா பப்ளிஸிடி அதிகாரி, ப்ளாக் அபிவிருத்தி அதிகாரி முதலிய அதிகாரிகளிடம் கொடுத்து, அவைகள் மூலம் பிரசாரம் செய்யும்படி அவர்களிடம் சொல்லியிருக்கிறோம்.

SRI J. MATHA GOWDER : தீண்டாமை ஒழிப்பிற்காக வேறு பலவகைப் பட்ட நடவடிக்கைகள் எடுத்தாலுங்கூட அதை ஒழிப்பதற்கு சிரமம் ஏற்படுகிறது. ஆகவே ஒரு ஜாதிக்காரரும் தங்கள் ஜாதியில் இருந்து கல்யாணம் செய்யக்கூடாதென்றும் வேறு ஜாதியில் இருந்துதான் கல்யாணம் செய்து கொள்ளவேண்டுமென்றும் கட்டாயப்படுத்தி அதற்காக ஒரு சட்டம் கொண்டுவர சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அப்பேர்ப்பட்ட சட்டத்தை அரசாங்கம் கட்டாயமாக கொண்டு வரமுடியாது.

SRI A. V. P. ASAITHAMBI : தீண்டாமை ஒழிப்பிற்காக ஒரு சினிமா படம் விலைக்கு வாங்குவதாக அரசாங்கம் உத்தேசித்து இருந்தது. அதை வாங்கி விட்டார்களா ? அல்லது வாங்கும் தீர்மானத்தை கைவிட்டு விட்டார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அங்கத்தினர் தனியாக கேள்வி போட வேண்டும்.